


ஃ பழீலதுஷ் ஷெய்க் அஸ்ஸெய்யித் அப்துல் அஸீஸ்
மௌலானா குஷ்ஹாலி அய்யதஹு முல்லாஹுல் அஸீஸ்

# طلوع السعيد ﷺ

تاليف. فضيلة الشيخ مخدوم ملة والدين
سيدعبدالعزيزالخوشحالى دامت بركاتهم

مساعد.. مولوى الحاج ابراهيم احمد العزيزى
ايده الله بالعزيز

اخراج.. الجمعية الاشاعة الاهل السنة

رقم التسلسل – 17

# நுகரும் முன் . . .

***எல்லாம் வல்ல அல்லாஹ்வின் பெயர் கூறி, அருள் நாடி***

***ஏந்தல் நபி ﷺ அவர்கள் மீது ஸலவாத்தும் ஸலாமும் கூறி..***

அன்புடையீர்,

வல்லவனாம் அல்லாஹ் தனது வான்மறை திருக்குர்ஆனில்.. நானுங்களுக்கு வழங்கியிருக்கும் அருட்கொடைகளை கணக்கிடுவீர்களாயின் உங்களால் அதனை மட்டிட முடியாது என அருளுகிறான்.

எண்ணற்ற அருட்கொடைகளை வழங்கிய அல்லாஹ் அவற்றிற்கு எம் கோமான் ﷺ அவர்களை மூல காரணமாக்கினான். இறையருள் எமக்கு கிடைப்பதற்கு காரணமாக்கினான். அவர்களின் பரிசுத்த வெளிப்பாடு இல்லையெனில் எதுவுமே இல்லை என்ற கருத்தினை ஹழ்ரத் இமாம் ஷாஃபிஈ (ரஹ்) அவர்கள் குறிப்பிட்டுள்ளதாக இஆனதுத் தாலிபின் (1-13) குறிப்பிடுகிறது.

இதுபோன்ற கருத்துக்களை மார்க்க அறிஞர்கள் கூறியிருப்பதாலும் அந்நாளில் நான் பிறந்ததாலும் எனக்கு நபித்துவம் வந்ததாலும் திங்கட் கிழமை தோறும் நோன்பு நோற்கிறேன் என நபிகள் ﷺ அவர்கள் கூறியிருப்பதாலும் பெருமக்களான நாதாக்கள் மீலாதுப் பெருநாளை நடத்துவதற்கான வழியினை காட்டினார்கள்.

மௌலிது ஓதுவதும், மீலாது விழாக்கள் நடத்துவதும் நன்மை தரக்கூடியதே அன்றி ஷிர்கானதென்றோ பித்அத்தானது என்றோ அத்தூயவர்களில் யாரும் கூறவில்லை. மாறாக அவ்வாறு கூறுபவர்கள் தான் அல்குர்ஆனையும் அல்ஹதீதையும் தவறாக புரிந்து கொண்டவர்கள் என குறிப்பிட்டுள்ளார்கள்.

திருநபி ﷺ அவர்களின் ஜனன தினத்தை மகிழ்வுடன் கொண்டாட அதில் மீலாது விழாக்களை அமைப்பது கூடும் என்பதையும் அதற்கு நன்மை உண்டென்பதையும் நிரூபிக்கவே குர்ஆன் ஹதீது மற்றும் இமாம்களின் கூற்று ஆகியவற்றை ஆதாரமாகக் கொண்டு இச்சிறு நூலை வடித்துள்ளேன். வல்ல அல்லாஹ் அண்ணல் எங்கள் தாஹா நபி ﷺ அவர்களின் பொருட்டால் இச் சேவையை கபூல் செய்வானாக ஆமீன்.

**அஸ்ஸெய்யிது அப்துல் அஸீஸ்**

**மௌலானா குஷ்ஹாலி**

بِسْمِ اللهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ

**الحمد لله موفق المتقين لشكر النعمة والصلاة والسلام على من ارسله الله للعالمين رحمة وعلى اله واصحابه الهداة وعلى سائر من اقتفى أثره واهتدى بهداه ***

அருட்கொடைகளுக்கு நன்றி செலுத்தும் நல்லெண்ணத்தை இதயத்தில் உதயமாக்கி அதற்கான வாய்ப்பையும் வழங்கிய வல்லவனாம் அல்லாஹ்வுக்கே வழுத்துகின்ற புகழனைத்தும் அல்ஹம்துலில்லாஹ்.

அகிலத்தார் அனைவருக்கும் அருட்கொடையாய் அவனியில் அவதரித்த அருட்சுடர் கோமான் நபிகள் பிரான் ﷺ அவர்கள் மீதும், அவர்களின் உற்ற குடும்பத்தினர் மீதும், நேர்வழிகாட்டும் நட்சத்திரங்களான அவர்களின் உன்னத தோழர்கள் மீதும், பின்பற்றப்படுவதற்கு தகுதி வாய்ந்த தாபியீன்கள் மீதும், இமாம்கள், மஷாயீகின்கள் யாவர் மீதும் .இறையருட் சாந்தியும் இதமான சமாதானமும் நின்று நிலவுமாக.

நபிபூமான் ﷺ அவர்களின் பிறந்த நாளை திருநாளாக்கி பெருவிழாவாக கொண்டாடி மகிழ்வது அன்னவர்களை கண்ணியப்படுத்தி மேன்மை படுத்துவதுதான் என்பது அன்பும் அறிவும் மிக்க யாவரும் ஏற்றுக்கொண்டவிடயம்.

கருணை நபியவர்கள் மீது பேரன்பு கொள்வது ஷரீஅத்தின் பார்வையில் தலையாய கடமை என்பதோடு இதயத்தில் ஈமானும் செயலில் வணக்கமும் பிரகாசித்து துலங்குவதற்கு அவசியத்திலும் அவசியமாக கருப்பொருள் என்பதை யாவரும் உணர்ந்து கொள்ளல் வேண்டும்.

நபிகள் கண்மணி நாயகம் ﷺ அவர்கள் இவ்வையகத்தில் ஜனனமானதினால் இப்புவியே பிரகாசமானது. அவர்களின் வருகை மனிதனுக்கு மட்டுமின்றி முழு உலகிற்கும் அருளானது. இ[illegible]

தேன்மறை திரு-குர்ஆன் தெளிவாக பறைசாற்றுகிறது . வையகத்தையே ஒளியாக்கி தனது வாழ்வை வழியாக்கி அருட் போதனைகளை விழியாக்கி தந்த அண்ணல் நபியின் அவதார தினத்தை அருட்தினமாக கொண்டாடுவதில் குற்றமென்ன இருக்க முடியும்?

இதன்றி அழியாப் பொதுமறை அருளாளனின் அருள் மறை அண்ணல் நபியுல்லாஹ் ﷺ அவர்களின் முபாரக்கான அங்கங்களைப் புகழ்ந்து குறிப்பிடுவதைப் பாருங்கள்.

### 1. நபிகளின் உள்ளம்

**நாயகமே!** இறையின் உத்தரவு பிரகாரம்அவர் (ஹழ்ரத் ஜிப்ரீல்அலை) உங்கள் இதயத்தில் இதனை (அல்-குர்ஆனை) இறக்கிவைத்தார்.

அல் பகரா : 97

**நாயகமே!** உங்கள் இதயத்தை திடப்படுத்துவதற்காக இதனை (அல்-குர்ஆனை) சன்னம் சன்னமாக (இறக்கிவைத்தோம்)

அல்ஃபுர்கான் : 32

அவர்கள் (நபிகள்) கண்டதை அவர்களின் இதயம் பொய்ப்படுத்தவில்லை

அந்நஜ்ம் : 11

### 2. நபிகளின் குணம்

**நாயகமே!** நிச்சயமாக நீங்கள் மகத்தான நற்குணம் உள்ளவர்களாக இருக்கிறீர்கள்

அல்கலம் : 4

### 3. நபிகளின் வதனம்

**நாயகமே!** வானத்தின் அளவில் தங்களின் திருவதனத்தை அடிக்கடி திருப்புவதை நாம் காண்கிறோம்.

அல் பகரா : 144

### 4. நபிகளின் பார்வை

அவர்களின் (நபிகளின்) பார்வை விலகவுமில்லை, தடுமாறவுமில்லை.

அந்நஜ்ம் : 17

## 5. நபிகளின் உயிர்

**நாயகமே!** உங்களின் (மேலான) உயிரின் மீது சத்தியமாக நிச்சயமாக அவர்கள் தம் மதிமயக்கத்தில் தட்டழிந்து கொண்டிருந்தார்கள்

அல்ஹிஜ்ர் : 72

## 6. நபிகளின் கண்

**நாயகமே!** அவர்களில் சில பிரிவினருக்கு அவர்கள் இன்பம் பெற நாம் வழங்கியிருக்கும் (வசதிகளின் பக்கம்) உங்கள் கண்களை செலுத்த வேண்டாம்.

தாஹா-131

## 7. நபிகளாரின் ஊர்

**நாயகமே!** நீங்கள் தங்கியிருக்கும் இந்த (மக்கா) நகர் மீது சத்தியம் செய்கிறேன்.

பலத் - 12

## 8. நபிகளின் மனைவியர்

**நபிகளின் மனைவியரே!** உங்களில் எவரும் பிற பெண்களைப் போலில்லை.

அல் அஹ்ஸாப் - 32

இந்நபியவர்கள் முஃமின்களுக்கு அவர்களது உயிரை விட மேலானவர்களாகவும், அவர்களது மனைவிமார்கள் அவர்களது (முஃமின்களது) தாய்மார்களாகவும் உள்ளனர்.

அல் அஹ்ஸாப் - 6

## 9. நபிகளின் மொழித்தல்

நபியவர்களுக்கு வஹி(தெய்வ) அறிவிப்பு வழங்கப்பட்டேயன்றி அவர்கள் தம்மிச்சைப்படி எதையும் பேசுவதில்லை.

அந்நஜ்ம் - 3

## 10. நபிகளின் சப்தம்

**முஃமின்களே!** நபிகளின் சப்தத்தை விட உங்கள் சப்தத்தை உயர்த்தாதீர்கள். நீங்கள் உங்களுக்குள் ஒருவருக்கொருவர் இரைந்து பேசுவது போன்று அவர்களிடமும் உரத்து பேசாதீர்கள். அவ்வாறு பேசுவதினால் நீங்கள் அறியாவகையில் உங்கள் அமல்கள்(நற்செயல்கள்) அழிந்து போகும்

அல் ஹுஜுராத் - 2

## 11. நபிகளுக்கு வழிப்படல்

எவர் நபிகளுக்கு வழிப்பட்டாரோ அவர் திடனாக அல்லாஹ்விற்கு வழிபட்டவர். அந்நிஸா - 80

## 12. நபிகளின் புகழ்

(நாயகமே)உங்களுக்காக நாம் உங்களின் (புகழை) நினைவை மேலோங்கச் செய்தோம். அல் இன்ஷிராஹ் - 4

அல்லாமா பக்ருத்தீன் ராஸி (ரஹ்) அவர்கள் தமது அத்தஃப்ஸீருல் கபீர் என்ற திருக்குர்ஆன் விரிவுரை நூலில் (32-208-ல்) உங்கள் புகழை மேலோங்கச் செய்தோம் என்ற வசனத்திற்கு.........

நாயகமே! நாம் உங்களை விண்ணிலும், மண்ணிலும் பிரபல்யமாக்கி எமது அர்ஷாகிய சிம்மாசனத்தில் தங்களின் திருப்பெயரைப் பதித்து, அப்பெயரை அத்தஹிய்யாத்தில் என் நாமத்தோடு இணைத்து, முன்னுள்ள வேதங்கள் அனைத்திலும் உங்களைக் கொண்டு சுபச் செய்தி அறிவித்து உங்களைக் கொண்டே நபித்துவ தொடரை முத்திரையுமிட்டோம்.

அத்தோடு சகல இஸ்லாமிய அனுஷ்டானங்களிலும் உங்களின் திருநாமம் இடம் பெறுவதை மார்க்கத் தூணாக்கி நம் பெயரோடு உங்கள் பெயரையும் இணைத்து திருமறையில் கூறியுள்ளோம். மற்ற நபிமார்களைப் பெயர் கூறி அழைத்த நாம் உங்களை நபியே, ரசூலே, என்றழைத்தோம்.

கலிமா மொழிந்தோர் உங்களைப் புகழ்ந்துரைக்க வேண்டுமெனவும் உங்கள் பெயரைக் கேட்டால் ஸலவாத் கூற வேண்டுமெனவும் (முஃமின்கள்) உங்கள் சொல், செயல்களைப் பாதுகாக்க வேண்டுமெனவும் நாம் கட்டளையிட்டதோடு, உங்கள் கரம் பிடித்தவன், எமது கரம் பிடித்தவன் எனவும், சொத்து, சுகம், உயிர் என அனைத்தை விடவும் உங்களை விரும்பும் ஒருவனையே முஃமினாக கணிப்பேன் எனவும் கருத்தாகும் என குறிப்பிடுகிறார்கள்.

இத்தகைய சிறப்பும், மேன்மையும் நற்குணமும் நிறைந்த நமது உயிரை விட மேன்மையான நபிகளின் ஜனன தினத்தைக் கொண்டாட முடியாதா? என்ன?

நபிகள் கண்மணி ﷺ அவர்களின் பிறந்த நாளை ஈகைத் திருநாளாக கொண்டாடுவதெல்லாம் அவர்கள் மீது கொண்ட பேரன்பின் வெளிப்பாடேயாகும். இதனை ஷரிஅத் பெரிதும் விரும்புகிறது.

அத்தினம் இறை இல்லங்களும், வீதிகளும் அலங்கரிக்கப்பட்டு உலமாக்களால் நபிகளின் சிறப்பம்சங்களையும் அவர்களுக்கு வழிப்பட வேண்டியதின் அவசியத்தையும் பொது மக்களுக்கு எடுத்துரைக்கப்படுகிறது.

اجتماع الناس وقرائة ما تيسر من القرآن الكريم وروايته الاخبار الواردة فى ولادة نبى من الانبياء او ولي من الاولياء ومدحهم بافعالهم وأحوالهم *

மௌலிது என்பதற்கு பிறந்த நேரம் அல்லது பிறந்த இடம் என அகராதி கூறுகிறது. நடைமுறையில் மௌலிது என்பதற்கு மக்கள் ஒன்று சேர்ந்து குர்ஆன் வசனங்களை ஓதி நபிமார்கள் அல்லது வலிமார்கள் பிறந்த நேரத்தில் நடைபெற்ற அல்லது அவர்கள் செய்து காட்டிய அரிய பெரிய விஷயங்களை கூடியிருக்கும் மக்கள் மன்றில் அறிஞர்களால் எடுத்துரைக்கப்படுவதாகும் என இமாம்கள் கூறியுள்ளார்கள்.

புலூகுல் மஃமூல்ஃபி இஹ்திஃபாலி மௌலிதிர்ரசூல் - பக்கம்-16

இக்கருத்தினை ரஷீத் அஹ்மது கன்கோஹி கூட தன் ஃபத்வாவில் குறிப்பிட்டுள்ளார்.

இறைச் சின்னங்களில் மிக உன்னதமானவர்களாக திகழ்பவர்கள் நபிமார்கள்.

இச்சின்னங்களை கண்ணியப்படுத்தும் ஒருவனை -முத்தகி - இறைபக்தியுள்ளவன் - என்பதாக 22-ம் அத்தியாயத்தின் 32-ம் வசனம் கூறுகிறது.

ومن احسن مابتدع فى زماننا ما يفعل كل عامر فى اليوم الموفق من مولده صلى الله عليه وسلم من الصدقات والمعروف واظهار الزينة والسرور فان ذلك مع ما فيه من الاحسان الى الفقراء مشعر محبته صلى الله عليه وسلم وتعظيمه فى قلب فاعل ذلك وشكرا لله تعالى على ما من به من ايجاد رسوله الذى أرسله رحمة للعالمين *

குறிப்பாக ரபீவுல் அவ்வல் பிறை 12-ம் தினத்தில் மௌலிது ஓதி அத்தினத்தை விமர்சையாக கொண்டாடி கௌரவிப்பதை விட மகிழ்ச்சிகரமான நாள் எமது சகோதரர்களான உண்மை விசுவாசிகளுக்கு வேறுநாள் இருக்க முடியுமா?

நபிகளின் ஜனன தினத்தை மகிழ்வாக கொண்டாடுவதின் நிமித்தம் ஏழைகளுக்கு உணவளித்தல், குடும்பத்தாருக்கு விருந்து வைத்தல், புத்தாடை அணிதல் என்பது போன்ற காரியங்களில் ஈடுபடுவது அண்ணல் நபி மீது நாம் கொண்ட அன்பின் வெளிப்பாடுகள் என கருதி இதனைத் தோற்றுவித்தவர்கள் பெருமக்களான இமாம்கள் தான். இக்கருமங்கள் நன்மை தர வல்லவை என அபீஷாமா எனப் புகழ் பெற்ற இமாம் ஷிஹாபுத்தீன் அஷ்ஷாபிஈ அவர்கள் "அல்பாயித் அலா இன்காரில் பிதஇ வல்ஹாதித்"என்ற கிதாபில் 23-ம் பக்கத்தில் குறிப்பிட்டுள்ளார்கள்.

يرى كثير من المفسرين وأهل الرسوخ فى العلم وجوب اظهار الفرح والسرور صلى الله عليه وسلم وهو أمر مطلوب بالقرآن والسنة *

ரபீவுல் அவ்வல் மாதத்தில் நபியவர்களின் ஜனன தினத்தை மகிழ்வுடன் கொண்டாடுவது மார்க்க நற்கருமங்களில் உட்பட்டது என திருமறை விளக்க விற்பன்னர்களும் பெரியார்களும் கருதுகிறார்கள். அத்துடன் அவர்கள் தங்களின் வாழ்நாளில் முடிந்தவரை அந்நாளை சிறப்பித்தும் வந்துள்ளனர்.

(இழ்ஹாருல் ஃபரஹி வஸ்ஸுரூரி பிமீலாதிந் நபிய்யில் மப்ரூர்-பக்கம்-13)

## ரபீவுல் அவ்வல் மாதத்தின் சிறப்பு

பொதுவாக மாதங்களோ நேரங்களோ சிறப்புமிக்கதாக அமைவது அவ்வப்போது நிகழும் காரியங்களை அடிப்படையாகக் கொண்டேதான் என்பது யாவரும் அறிந்த ஒன்று. உதாரணமாக. வல்ல அல்லாஹ்வின் அருள் மறையான அல்குர்ஆன் புனித ரமழான் மாதத்தில் அருளப்பட்டதால் அம்மாதம் மேன்மையடைந்தது. இதுபோலவே அல்லாஹ்வின் அருள்நபியாகவும் நபிமார்களின் தலைவராகவும், முத்திரையாகவும் திகழும் அண்ணலெம் கண்மணி ﷺ அவர்கள் பிறந்ததால் புனித ரபீவுல் அவ்வல் மாதம் சிறப்புற்றது.

வான்மறை குர்ஆன் ரமழானில் இறங்கியதால் அதுசிறப்பானதோடு அது இறங்கிய இரவை, வல்ல அல்லாஹ் ஆயிர மாதத்தை விடவும் சிறந்தது என கூறுகிறான். உண்மையில் முஸ்லிம்களான எமக்கு அல்குர்ஆன் அல்லாஹ்வின் பேரருள்களில் ஒன்றே. அதன் ஒவ்வொரு அட்சரமும் மனிதனின் இதயத்தை ஒளிமயமாக்கி வைக்கும் சக்தி கொண்டது. மேலும் இது மனிதர்கள் ஜெயம் பெற முக்கிய இடத்தை வகிக்கும் பொக்கிஷமாகும்.

அல்குர்ஆன் இறங்கிய மாதம் சிறப்பானது. அது இறங்கிய இரவு ஆயிரமாதங்களை விட மேன்மையானது எனில், யாரின் வருகையை வெளிப்படுத்த யாரின் வார்த்தையை உண்மைப்படுத்த யாரின் உள்ளத்தில் இக்குர்ஆன் இறக்கப்பட்டதோ அந்த நபிகளின் பிறந்த மாதம் எத்தகைய

சிறப்பு வாய்ந்ததாக இருக்க வேண்டும். அவர்கள் பிறந்த நாளும் நேரமும் எத்துனை உன்னதமிக்கதாக இருக்க வேண்டும். அன்னை ஆயிஷா சித்தீக்கா (ரழி)அவர்கள் நபிகளின் குணத்தைப் பற்றி குறிப்பிடும் போது அவர்களின் குணம் குர்ஆனாகவே இருந்தது என இயம்புகிறார்கள்.

இறைவா! வானத்திலிருந்து எங்களுக்கு ஓர் உணவு தட்டை இறக்குவாயாக. அது (அந்நாள்) எங்களுக்கும், எங்களுக்குப் பின் வருவோருக்கும் பெருநாளாக அமையும் (என நபி ஈஸா (அலை) அவர்கள் பிரார்த்தித்தார்கள்) மாயிதா - 114

இவ்வசனத்தின் மூலம் இறைவனின் அருள் கிடைக்கும் நாள் சிறப்பு வாய்ந்தது எனவும் அந்த நாள் கொண்டாடப்படுவதற்கு தகுதியான நாள் எனவும் வல்ல அல்லாஹ் தனது நபியின் மூலம் நமக்கு உணர்த்துகிறான்.

இவ்வசனத்தில் உள்ள அவ்வலினா, ஆகிரினா என்ற வார்த்தைகளில் உள்ள "னா" என்ற எழுத்து அருள் வழங்கப்படும் நேரத்தில் நபி ஈஸா (அலை) அவர்களோடு இருப்போரையும், பின்பு அவர்களை நபி என்று ஏற்போரையும் குறிக்கும்.

## உபகாரத்திற்கு நன்றி செலுத்துதல்

மனிதன், மனிதனுக்குச் செய்த உதவிகளுக்கு நன்றி செலுத்துவது மனிதாபிமான இன்றியமையா செயலாகும். மனிதனுக்கே நன்றி செலுத்தாதவன் இறைவனுக்கு எப்படி நன்றி செலுத்துவான்.

இறையோன் நமக்களித்த உபகாரங்களுக்கு நன்றி செலுத்துவது நம்மீது தார்மீக கடமையாகும். வல்ல அல்லாஹ்வும் உபகாரங்களுக்கு நன்றி செலுத்தவும், அவன் வழங்கிய அருட்கொடைகளை பிறருக்கு எடுத்துக் கூறவும் கட்டளையிடுகிறான். அத்துடன் நன்றி செலுத்தினால் அவனது உபகாரங்களை நம்மீது அதிகப்படுத்துவதாகவும், மாறு புரிந்தால் தண்டிப்பதாகவும் எச்சரிக்கிறான்.

வல்ல அல்லாஹ் திருமறை குர்ஆனில் பல இடங்களில் அடியார்களுக்கு அவன் வழங்கிய நிஃமத்-பேருபகாரங்களை நினைவு கூறுமாறு இயம்புகிறான். அந்த வகையில், முந்தைய நபிமார்களும் அவன் வழங்கிய உபகாரங்களுக்கு நன்றி செலுத்தியதோடு வழங்கப்பட்ட நாளை திருநாளாகவும் கொண்டாடியுள்ளனர்.

எகிப்தில் வாழ்ந்த பனூ இஸ்ராயீல்கள் ஃபிர்அவ்னின் பிடியிலிருந்து காப்பாற்றப்பட்ட தினத்தை நினைவு கூறுமாறு அல்லாஹ் கட்டளையிடுகிறான். அதற்கிணங்க யஹூதிகளும் ஒவ்வொரு வருடமும் அத்தினத்தில் நோன்பு நோற்று அந்நாளை கௌரவிக்கின்றனர்.

ربنا انزل علينا مائدة من السماء تكون لنا عيدا لاولنا وآخرنا وآية منك وارزقنا وانت خير الرازقين *

المائدة

விண்ணிலிருந்து உணவு மரவை இறங்குவதை திருநாளாகக் கொண்டாடுவதற்கு ஒரு நபி வேண்டியதை அல்லாஹ் தனது திருமறையிலேயே எடுத்து கூறுகிறான். என்றால் இவ்வகிலத்தார் யாவருக்குமே அருட்கொடையாகவும், ரஹீமான அருளாளராகவும் வந்துதித்த வள்ளல் நபி ﷺ அவர்களின் வருகைநாள் எத்துணை சிறப்பு வாய்ந்ததாக இருக்க வேண்டும். அத்துடன் அந்நாள் கொண்டாடுவதற்கு எவ்வளவு தகுதி வாய்ந்ததாக இருத்தல் வேண்டும்.

அல்லாஹ்வையும் அவனது ரசூலையும் வெறுமனே ஏற்றுக் கொண்டால் மட்டும் ஈமானின் பேரமுதத்தை சுவைத்திட முடியாது. அவ்விருவரையும் விட பிரியமானதாக உலகில் எதுவும் இருத்தல் கூடாது. அப்போது தான் ஈமானின் முழு ருசியையும் பெற முடியும்.

யாவற்றையும் விட அல்லாஹ்வையும் அவனது ரசூலையும் நேசிக்கும் ஒருவன் ஷரீஅத் அனுமதித்த, ஷரீஅத்தின் வழியில் ஆய்வு செய்த பெரியார்கள் அனுமதித்த அனைத்தையும் செம்மையாக செய்வானேயன்றி ஆதாரம் கேட்டு நிற்க மாட்டான்.

சமுதாயங்களில் இறுதியாக வந்த நமக்கு அல்லாஹ் வழங்கிய ரஹ்மத்துக்கள் எண்ணற்றவை. அளவிட முடியாதவை. இவற்றில் மிக உன்னதமானது எது.......?

ஃபிர்அவ்னின் பிடியிலிருந்து மீட்சி பெற்றது நபிமூஸா (அலை) அவர்களுக்கும் அவர்களது சமுதாயத்தினருக்கும் பேரருளாக இருந்தது. எனவே அவ்விடுதலை கிடைத்த நாளை திருநாளாக ஏற்றனர்.

வானிலிருந்து உணவு மரவை இறங்கியது நபி ஈஸா (அலை) அவர்களுக்கும் அவர்களது சமூகத்தினருக்கும் பேரருளாக இருந்தது. அந்நாள் அவர்களில் மகிழ்ச்சிக்குரியதாக இருந்தது.

எமக்கு எது..................................................?

## உம்மத்து முஹம்மதியாவின் உன்னத பேரருள்

வல்லவன் அல்லாஹ் தன் வான்மறை குர்ஆனில் கண்மணி நாயகம் ﷺ அவர்களை நோக்கி நாயகமே! உங்களை நாம் வையகத்தார் யாவருக்கும் அருட்கொடையாக அனுப்பினோம் என்கிறான் ரஹ்மத்தாக (அருளாக) மட்டுமின்றி ரஹீமாக (அருள்புரிபவராக)வும் அல்லாஹ் அவர்களை அனுப்பியிருக்கும்போது, அந்த நபிகள் பூமான் ﷺ அவர்களது ஜனனம் எத்துணை மேன்மை மிக்கதாக இருக்க வேண்டும்.

பிரிதொரு வசனத்தைக் கவனியுங்கள்.

لقد من الله على المؤمنين اذ بعث فيهم رسولا * (آل عمران 163)

அல்லாஹ் முஃமீன்களுக்கு அவர்களில் ஒருவரை ரசூலாக அனுப்பி (அவர்களுக்கு) பேரருள் புரிந்துள்ளான்.

இத்திருவசனம், நபிகளின் வருகை உன்னதப் பேரருள் என்பதனை சிற்றறிவு படைத்தோருக்கும் கூட தெளிவுறச் செய்கிறது. இதிலிருந்து முஃமின்களுக்கு பேரருளாக இருப்பது நபிகளே என்பது தெளிவாக புரிகிறது. அத்தகைய பேரருள் உதயமாகிய தினம் சங்கைக்குரியதாக அல்லாமல் இருக்க முடியுமா ...... என்ன? எனவே தான் அந்நாளை உன்னத திருநாளாக உத்தம பெருநாளாக கொண்டாடி மகிழ்கிறோம்.

அடுத்த வசனம் யாது கூறுகிறது என்பதனை கவனியுங்கள்.

قل بفضل الله وبرحمته فبذالك فليفرحوا هو خير مما يجمعون * (يونس 58)

அல்லாஹ்வின் அருளினாலும், அவனின் பெருங்கிருபையினாலும் அதனை அவர்கள் சந்தோஷித்து மகிழட்டும். அது அவர்கள் திரட்டியிருக்கும் (அனைத்து செல்வம்) யாவை விடவும் மிக்க மேலானதாகும்.

அல்லாஹ்வினது அருளும் ஆசியும் கிடைப்பதை மகிழ்ச்சிகரமாக கொண்டாடுவதற்கு எமக்கு அல்லாஹ் அனுமதியளித்திருக்கிறான்.

கொண்டாட்டம் என்பது எப்படி ஒரு சமுதாயத்திடமிருந்து வெளியாகும்?

ஷரீஅத்திற்கு மாற்றமில்லா வகையில் ஒரு மனிதன் எப்படியெல்லாம் வெளிப்படுத்த வேண்டுமென கருதுகிறானோ அப்படியெல்லாம் வெளியாகும். புத்தாடை அணிவது, மணம் பூசுவது, புகழ் பாடல்கள் பாடுவது, அன்னதானம் வழங்குவது, அன்பர்களை அழைத்து விருந்தளிப்பது இப்படியெல்லாம் வெளிப்படுத்தலாம்.............இல்லையா?

இனி, இதுபோன்ற காரியங்களைப் புரியும் போது அதற்கான பொருட்செலவும் ஏற்படத்தானே செய்யும். ஆக கொண்டாடுவதும் அக் கொண்டாட்டத்திற்காக செலவழிப்பதும் அனுமதிக்கப்பட்ட ஒன்று என்று தெளிவான பின்பு உண்மை முஃமின்களுக்கு நபிகளின் ஜனன தினத்தை கொண்டாடுவதில் ஆட்சேபம் இருக்க முடியாது. ஏனெனில் அல்குர்ஆனின் சூரத்துல் அன்பியாவின் 107-ம் வசனம் நபிகளின் வருகை பேரருள் என சுட்டுகிறது.

சூராயூனுஸின் 58-ம் வசனமும், சூரத்து ஆலி இம்ரானின் 164-ம் வசனம் சூரத்துல் அன்பியா 107-ம் வசனமும் நபிகளே பெரும் அருட்கொடையென்றும், அவ்வருளை கொண்டாடட்டும் என்றும் கூறுகின்றான்.

இதனை இன்னும் சற்று விளக்கமாகப் பார்ப்போம்.

அல்லாஹ் தனது அருள்மறையில் யாஅய்யுஹன்னாஸ், யாஅய்யுஹல்லதீன ஆமனூ என்று நம்மை விழிக்கிறான். ஆனால் மிக முக்கியமான செய்திகளை அல்லது தன்னைப்பற்றிய தகவல்களை கூறும் போது அதன் வசனத்தின் துவக்கத்தில் குல் என்பதனை இணைத்து தான் நேரடியாக சொல்வது போன்றில்லாமல் நபிகளின் மூலமாக நாயகமே! நீங்கள் சொல்லுங்கள் என அவ்விஷயத்தோடு நபிகளையும் தொடர்பு படுத்திக் கூறுகிறான்.

குல்ஹுவல்லாஹு அஹத், ஆலு இம்ரானின் 31-ம் வசனம் என்பது போன்றவற்றை இதற்கு உதாரணமாகக் குறிப்பிடலாம்.

இந்த அடிப்படையிலேயே தனது பேரருள் கிடைத்ததை எண்ணி கொண்டாடி மகிழுமாறு நபிகள் மூலம் குறிப்பிடுகிறான்.

ஆக, அல்லாஹ்வின் அருளை கொண்டாடும் விஷயம் சாதாரணமான ஒன்றல்ல. இறை நெருக்கத்தையும் அவனது அன்பையும் பெற்றுத்தர வல்லது என்பதனை "குல்" என்ற சொல் உறுதிப்படுத்திக் காட்டுகிறது.

மேலும் இவ்வசனத்தில் இடம் பெற்றுள்ள ரஹ்மத், ஃபழ்ல் என்ற இரு வார்த்தைகளுக்கிடையில் வாவு என்ற தொடர்பு எழுத்து வந்துள்ளது. இதன் மூலம் அவ்விரண்டு வார்த்தைகளும் வேறு என்று தெரிகிறது. எனினும் பின்பு வரக்கூடிய "தாலிக்" என்ற சுட்டுச் சொல் அவ்விரண்டும் ஒன்று என்று தெளிவாக்குகிறது. ஏனெனில் முன் சென்ற இரண்டு வார்த்தைகளை சுட்டிக் காட்டுவதற்கு "தாலிகுமா" என்றே வந்திருக்க வேண்டும்.

ஃபழ்ல், ரஹ்மத் இவ்விரண்டையும் கூறிய பின்பு "இவ்விரண்டைக் கொண்டும் மகிழ்ச்சி அடையுங்கள்" என கூறியிருக்க வேண்டும். ஆனால் இங்கே ஒருமையிலே கூறப்பட்டிருப்பதால் குர்ஆன் இலக்கண நடைமுறைக்கு மாற்றம் புரிகிறது என்றா எடுத்துக் கொள்ள முடியும்? இல்லை மாறாக அவ்விரண்டுமே ஒன்றே என்று தெரிய வருகிறது. ஆக ஒரு விஷயத்தை அல்லாஹ் இரு வேறு வார்த்தைகளைக் கொண்டு கூறியிருக்கிறான்.

அது எது என்பதைப் பற்றி மௌலானா அஷ்ரப் அலி தானவி தமது மீலாதுன் நபி என்ற நூலின் 104-ம் பக்கத்தில் ரஹ்மத், ஃபழ்ல் என்ற இரண்டும் ஒன்று தான் என்றும் அது நம்மை வந்தடைந்த நாளையே கொண்டாடும்படி இறைவன் கூறுகிறான் என்றும் இயம்புகிறார்.

மேற்கூறப்பட்ட ரஹ்மத், ஃபழ்ல் இரண்டும் ஒன்று என்றும் எனவே தான் ஒருமை சுட்டுச் சொல்லை இறைவன் பிரயோகித்திருக்கிறான் என்றும் விளங்கினோம்.

இனி, இவ்வசனத்தில் குல்பி ஃபழ்லில்லாஹி வபிரஹ்மதிஹி ஃபபல்யஃப்ரஹூ என்று இறைவன் கூறியிருந்தாலும் பொருள் சரியானதாகவே இருந்திருக்கும். இருந்தபோதிலும் "தாலிக்" என்ற சொல்லை இங்கே அதிகப்படுத்தியதிலிருந்து, மனிதர்கள் பெரும் மகிழ்ச்சியடைய வேண்டுமானால் அது இதனைக் கொண்டே தான் என இறைவன் அருளியிருக்கிறான் என்று இமாம் ஃபக்ருத்தீன் ராஸி (ரஹ்)

அவர்கள் தமது தஃப்ஸீருல் கபீர் என்ற நூலில் (17-123) குறிப்பிடுகிறார்கள்.

அடுத்து, சிலர் குறிப்பிடுவது போல் இந்நாள் கொண்டாடப்படுவதற்குரிய நாளாக இல்லாதிருக்குமானால் இறைவனின் கூற்றான ஃபல்யஃப்ரஹூ என்பதற்கு பொருள் இல்லாது போய்விடும். அதுமட்டுமின்றி அவ்வார்த்தைக்கு பகரமாக வல்ல அல்லாஹ் "பல்யஸ்ஜுதூ"சிரம் பணியுங்கள், "ஃபல்யுன்ஃபிகூ"-செலவு செய்யுங்கள், ஃபல்யஃபுதா-வணங்குங்கள் என்பது போன்ற வார்த்தைகளை கூறியிருக்க முடியுமே.

நோன்பு பிடிப்பதற்கு, ஹஜ் செய்வதற்கு குறிப்பிட்ட நாட்களும் தொழுவதற்கு குறிப்பிட்ட நேரமும் இருப்பது போன்று இவ்வருள் பெறப்பட்ட நாளையும் கொண்டாடி மகிழ வல்ல அல்லாஹ் கூறுகிறான்.

இப்படி சிறப்பாக கொண்டாடப்படுவது இந்தியா, இலங்கை மட்டுமின்றி ஏனைய பல நாடுகளிலும் சிறப்பான நடைமுறையில் இருக்கிறது. குறிப்பாக இராக், எகிப்து, சூடான், சிரியா, ஜோர்தான், லெபனான், எமன், பாகிஸ்தான், பங்களாதேஷ் போன்ற நாடுகளைக் கூறலாம். இங்கெல்லாம் அந்நாளை அரசாங்கம் அரசு விடுமுறையாக அறிவித்துள்ளது.

அந்நாளையில் அங்கே மக்களெல்லாம் ஒன்று கூடி சுப்ஹு தொழுகைக்குப் பின் மௌலிது ஓதி வருவதுடன் வீடுகளையும், வீதிகளையும் அலங்கரித்து மணம் பூசி விருந்தளித்து ஏழை, எளிய மக்களுக்கு அன்னதானமும் உடையும் தாங்களும் மகிழ்ந்து பிறரையும் மகிழச் செய்கின்றனர்.

தொடர்ந்து, வல்ல இறைவன் இவ்விடயம் குறித்து அவ்வசனத்தின் தொடரில் அப்படி கொண்டாடுவதும் அதற்காக செலவு செய்வதும் அவர்கள் சேமித்து வைத்துள்ள செல்வங்களை விட மேன்மையானது என குறிப்பிடுகிறான்.

## சேமிப்பு - ஓர் ஆய்வு

மேற்கூறிய வசனத்தில் "அவர்கள் சேமித்து வைத்ததை விடவும் இவ்வாறு கொண்டாடுவது மேன்மையானது" என இறைவன் அருளுகிறான். சேமிப்பு என்பதை பொறுத்தவரை, அது உலக வாழ்விற்கானதாகவுமிருக்கலாம் உதாரணமாக, நல்லொழுக்கம், நன்னடத்தை, தர்மம், தொழுகை போன்ற வணக்கங்கள் எப்படியாகினும் அக் கொண்டாட்டம் ஈருலக வாழ்க்கைக்காக சேமிப்பதை விடவும் சிறப்பானது என்பது தெளிவாகிறது.

ஆக, அருமையான சகோதரர்களே, அல்லாஹ்வின் பேரருள் கிடைத்த நாளை கொண்டாடுவதும் அதற்கான காலத்தையும், நேரத்தையும் ஒதுக்கி செலவு செய்வதும் அனுமதிக்கப்பட்டது என்பதோடு அதற்கான நற்கூலியும் இறைவனிடம் உண்டு என்பதை உணர்ந்து கொள்வீர்களாக.

### எச்சரிக்கை

இத்துணை தெளிவாக அருள் பிறந்த நாளைக் கொண்டாடுவது ஷரீஅத்தில் மிகவும் வரவேற்கப்பட்ட ஒன்று என்று விபரமான பின்பு யாரேனும் தான் படித்தவன் என்ற மமதையில் அல்லது தன்னிடம் எழுத்துவன்மை, நாவன்மை உள்ளது என்ற அகம்பாவத்தால் அந்நாளைக் கொண்டாடுவது கூடாது என்ற தீய கொள்கையை மக்கள் மத்தியில் பரப்ப வேண்டாம். அப்படி கொண்டாடுவது தனக்கு பிடிக்கவில்லையாயின் அதைப்பற்றி ஏதும் பேசாது மௌனியாகி விட வேண்டும். அதை விடுத்து அது கூடாது என்பதற்கு தன்னிடம் தகுந்த ஆதாரம் உண்டு என்று யாராவது விதண்டாவாதம் செய்தால் அவ்வாதம் நிலைக்காது என்றும் எச்சரிக்கிறோம்.

ولولا فضل الله عليكم ورحمته لاتبعتم الشيطان الا قليلا * ( النساء 83 )

## ஃபழ்லும் - ரஹ்மத்தும் - ஓர் ஆய்வு

அல்லாஹ்வின் ஃபழ்ல் எனும் கிருபையும், ரஹ்மத்தெனும் அருளும் உங்களுக்கு இல்லாதிருந்தால் உங்களில் சிலரைத் தவிர (பெரும்பாலானோர்) ஷைத்தானையே பின்பற்றியிருப்பீர்கள்.

இமாம் ஃபக்ருத்தீன் ராஸி தஃப்ஸீர் கபீரில் (4-156-ல்) ஃபழ்ல் என்பதற்கு குர்ஆன் என்றும், ரஹ்மத் என்பதற்கு நபிகள் ﷺ அவர்களின் வருகை என்றும்

முக்தஸர்தஃப்ஸீர் குர்துபீ 1-47, ரஹ்மத் என்பதின் கருத்து நபிகளே என்றும்

இமாம் இஸ்மாயீல் ஹக்கி (ரஹ்) அவர்கள் தஃப்ஸீர் ரூஹுல் பயானில் (2-247) குர்ஆனும், நபி அவர்களின் வருகை என்றும்

தஃப்ஸீர் கஷ்ஷாஃபில் (1-548) ஆசிரியர் இமாம் ஸமக்ஷரி அவர்கள் நபியவர்களின் வருகையும், வேதம் இறங்கலும் எனவும்

இமாம் பைழாவி (ரஹ்) அவர்கள் தமது தஃப்ஸீர் பைழாவியில் (1-227) நபியவர்களின் வருகையும் வேதம் இறங்கலும் எனவும்

இமாம் குர்துபி (ரஹ்) அவர்கள் அல்ஜாமிஃலி அஹ்காமில் குர்ஆனில் (3-318) நபியின் வருகையும் வேதமும் என்றும்

இமாம் ஷிஹாபுத்தீன் குபாஜி (ரஹ்) அவர்கள் ஹாஷியதுஷ் ஷிஹாபில் (3-188) நபியின் வருகையும் வேதமும் என்றும்

இமாம் நசபீ (ரஹ்) அவர்கள் தஃப்ஸீர் நசபீ-மதாரிக் தன்ஸீலில் (1-1332) நபியவர்களின் வருகையும் குர்ஆனும் என்றும்

இமாம் மாவருதி (ரஹ்) அவர்கள் தஃப்ஸீருல் மாவருதியில் (1-511) ஃபழ்ல் என்பதற்கு மூன்று விஷயத்தைக் குறிப்பிட்டு, அதில் முதன்மையானது நபிகளின் வருகை எனவும் கூறியுள்ளார்கள்.

மேற்கூறிய குர்ஆன் விரிவுரையாளர்கள், தத்தமது கிரந்தங்களில் சூரத்துன்னிஸா 83-ம் வசனத்தில் இடம் பெற்றுள்ள "ஃபழ்ல்"என்பதற்கு ﷺ அவர்களின் வருகை எனவும் "ரஹ்மத்" என்பதற்கு அல்குர்ஆன் எனவும் சூரா யூனுஸ் 58-ம் வசனத்தில் வரும் "பழ்ல்" என்பதற்கு வேதம் எனவும் ரஹ்மத் என்பதற்கு நபி பூமான் அவர்களின் வருகை எனவும் குறிப்பிடுகிறார்கள்.

இதனன்றி இன்னும் சிலர் இவ்விரண்டு சொல்லும் நபியவர்களையே குறிக்கும் என்கின்றனர். சூரத்துல்அன்பியாவின் 107ம் வசனம் ரஹ்மத் என்பது நபியவர்களின் வருகை தான் என ஊர்ஜிதப்படுத்துகிறது.

இதுவரை நீங்கள் படித்ததிலிருந்து ஒரு முஃமினின் மகிழ்விற்கு மிகுந்த காரணமானது நம் ஆருயிர் கண்மணி நாயகம் ﷺ அவர்கள் பிறந்தது தான் என்பதனை உணர்ந்திருப்பீர்கள். எனவே அவர்கள் பிறந்த ரபீவுல் அவ்வல் மாதம் அதிலும் குறிப்பாக அதில் அவர்கள் உதித்த நாளாகிய பிறை 12 மிகவும் மகத்துவத்திற்குரியது என்பது வெள்ளிடை மலையென புரிய வருகிறது. ஏனெனில் அல்லாஹ் வழங்கிய அருட்களில் மேன்மையானதாக நபிகளின் வருகையை தான் அல்லாஹ் குறிப்பிடுகிறான். இத்தகைய பேரருளை விட சிறப்பான வேறொன்று இருக்க முடியுமா?

நபிகள் பிறந்த நாளன்று மரம், செடி, கொடி, விலங்கினங்கள், காற்று, நீர், நெருப்பு, மண், விண், பட்சினங்கள், அமரர்கள் என யாவரும் வாழ்த்தினர், புகழ்பாடினர், வரவேற்றனர். அதற்காக அல்லாஹ்வை துதி செய்தனர் என மவாஹிபுல்லதுன்னியா கூறுகிறது.

நபிகள் பிரான் ﷺ அவர்கள் ஜனனம் தான் இவ்வையகம் ஒளிவடைவதற்கு காரணம். அவர்கள் பிறந்த நாளை கொண்டாடி மகிழ்வுறும்படி கீழ்வரும் அறிஞர்கள் தமது நூட்களில் பதிவாக்கியுள்ளனர்.

1. இமாம் ஃபக்ருத்தீன் ராஸி (ரஹ்) - தஃப்ஸீருல் 17-123
2. இமாம் சுயூதி (ரஹ்) - அத்துர்ருல் மன்தூர் 4-367
3. இமாம் ஆலூஸி (ரஹ்) - ரூஹுல் மஆனி 11-141
4. இமாம் அபூ அப்தில்லாஹ் (ரஹ்) - பஹ்ருல் முஹீத் 5-17
5. தஃப்ஸீர் அபுஸ் ஸுஊத் - 2-506
6. கிதாபுல் வஜீஸ் ஃபீதஃப்ஸீரில் குர்ஆனில் அஜீஸ் - 1-371
7. அஷ்ஷெய்க் அபூபக்ர் அஹ்மது அல்பாகவி - இழ்ஹாருல் ஃபரஹி வஸ்ஸரூர் பி மீலாதிந் நபிய்யில் மப்ரூர் - 15
8. அஷ்ஷெய்க் அப்துல்லாஹ் இப்னுமானிஃஅல்ஹிம்யரீ - புலூகுல் மஃமூல் பில் இஹ்திஃபால் பிமௌலிதிர் ரசூல் - 21
9. டாக்டர் முஹம்மத் தாஹிருல் காதிரி மீலாதுன்னபி - 161

ஏன் மௌலானா அஸ்ரஃபலி தானவி கூட தனது மீலாதுன்னபி என்ற நூலில் 120, 121-ம் பக்கங்களில் கூறியிருக்கிறார்.

புனித ரபீவுனில் அவ்வல் மாதம் பிறை பன்னிரெண்டாம் நாளைப் பற்றிய சிறப்பையும் அதில் புரிய வேண்டிய அமலையும் எடுத்துக்கூறி அவை அங்கீகாரமானவை என்பதற்கான சான்றுகளையும் தொகுத்து தந்தோம். இனி ............

அந்நாள் விழாக்கள் அமைத்து கொண்டாட வேண்டிய நாள் என மாபெரும் உலமாக்கள் குறிப்பிட்டுள்ளார்கள். அவர்களின் பெயர்களையும் அவர்கள் குறிப்பிட்ட நாட்களையும் தருவதாக இருந்தால் அதுவே ஒரு பெரும் நூலாக அமைந்து விடும் என அஞ்சி அவர்களில் சிலரை மட்டும் அவர்களது கிரந்தங்களின் பெயருடன் குறிப்பிடுகிறோம்.

1. இமாம் அப்துல்லாஹ் ஸித்தீக் அல்குமாரி - இத்கானுல் சுன்ஆ ஃபீ தஹ்கீகி மஃனல் பித்ஆ - 58
2. ஹுஸ்னுல் மக்ஸுத் ஃபீ அமலில் மௌலித் - இமாம் ஹாபிழ் ஜலாலுத்தீன் சுயூதி -
3. அஷ்ஷெய்கு அப்துல்லாஹ் அல்ஹிரரி - ஸரீஹுல் பயான் - 183
4. அஷ்ஷெய்கு அப்துல்லாஹ் அல்ஹிரரி - அல் மகாலாத்துஸ் ஸுன்னிய்யா - 187
5. இப்னு ஹஜர் அஸ்கலானி - அல் ஹாவிலில் பதாவா - 1-196
6. ஹாஃபிழ் இப்னு நாஸிருத்தீன் திமஸ்கி - மௌரிதுஸ்ஸாதி பீ மௌலிதுல் ஹாதி
7. ஹாஃபிழ் ஷம்சுத்தீன் இப்னுல் ஜௌஸீ - உர்புத் தஃலீப் பில் மௌலிதிஸ் ஷரீஃப்
8. அல் பாயித் அலா இன்காரில் பிதகி வல் ஹவாதித் - 13
9. இமாம் சகாவி - சுபுலுல் ஹுதா வர்ரஸாத் - 1-439
10. இப்னு ஹஜர் மக்கி - பதாவா ஹதீதிய்யா - 129
11. இமாம் அபூஸுர்ஆ அல் இராகி - தஷ்னிபுல் அதான் - 136
12. ஷெய்கு அப்துல் ஹக் முஹத்திக் தெஹ்லவீ - மாதபத மினஸ் ஸுன்னா - 102
13. ஷெய்கு அப்துர் ரஹீம் முஹத்திக் தெஹ்லவீ - அத்துர்த்துஸ் ஸமீன் - 40
14. ஷாஹ் வலியுல்லாஹ் முஹத்திக் தெஹ்லவீ-புயூசுல் ஹரமைன்-80,81
15. ஹாஜி இம்தாதுல்லாஹ் முஹாஜிர் மக்கீ - ஷமாயிம் இம்தாதிய்யா-94
16. மௌலவி அப்துல் ஹை லகனவீ-பதாவா அப்துல் ஹை-2-283

17. இமாம் குத்புத்தீன் ஹனபி - அல் இஃலாம் பி இஃலாமி பைத்தில்லா ஹில் ஹலாம் - 196

18. அஸ்ஸெய்யிது முஹம்மது கிப்ரீக் அல் ஹுஸைனி - அல்ஜவா ஹிருத்தமீனா பீ மஹாசினில் மதீனா

19. ஹாபிஸ் இப்னு ரஜப் அல் ஹன்பலீ - லதாயிபுல் மஆரிப் - 98

20. இமாம் அப்துர் ரஹ்மான் பின் ஷைபானீ - முக்தஸர் பிஸ் சீரதில் நபவிய்யா - 3-16

இப்படி ஒரு நீண்ட பட்டியலே தொடர்கிறது. அவர்கள் அனைவரும் நபிகள் அவர்கள் மீது மௌலிது ஓதலாம். பிறை பன்னிரெண்டில் கொண்டாடி மகிழலாம் என கூறியுள்ளார்கள். அவர்களின் பெயர் பட்டியலை விரிவஞ்சி விடுத்தோம். எனினும் குறிப்பிட்ட சிலரையும் அவர்களது கிதாபு ஆதாரங்களையும் குறிப்பிட்டுள்ளோம்.

عن ابى قتادة رضي الله عنه أن رسول الله عليه وسلم سئل عن صوم يوم الاثنين فقال ذا ك يوم ولدت فيه وفيه أنزل *

நபிகளார் ﷺ அவர்கள் ஒவ்வொரு திங்கட்கிழமையும் நோன்பு நோற்கும் வழக்கமுள்ளவர்களாக இருந்தார்கள். இது சம்பந்தமாக அவர்களிடம் கேட்கப்பட்டபோது நான் ஜனனமானதும், நபியாக அனுப்பப்பட்டதும் இந்நாளிலேதான் என நவின்றார்கள்.

நபியவர்கள் பிறந்தது ரபீவுல் அவ்வல் பிறை 12 திங்கட்கிழமை எனினும் ஒவ்வொரு திங்கட்கிழமையும் நோன்பு பிடிக்கும் வழக்கம் கொண்டவர்களாக இருந்தார்கள்.இதனை ஆதாரமாகக் கொண்டு ரபீவுல் அவ்வல் பிறை 12 மட்டுமின்றி ஒவ்வொரு திங்கட்கிழமையும் நாம் மீலாதுன்னபி விழா கொண்டாடுவது ஆகுமானதாகும்.எனினும் வருடத்தில் ஒருமுறை மட்டுமே சிறப்பித்து மகிழ்கிறோம்.

عن ابن عباس رضي الله عنهما قال لما قدم النبي صلى الله عليه وسلم المدينة وجد اليهود يصومون يوم عاشوراء فسألوا عن ذلك فقالوا هواليوم الذى أظهر الله فيه موسى وبنى اسرائيل عن فرعون ونحن نصوم تعظيما له فقال رسول الله صلى الله عليه وسلم نحن أولى بموسى وأمر بصومه *

நபிகள் திலகம் அவர்கள் புனித மதீனா சென்றடைந்த போது அங்கு வாழும் யஹூதிகள் ஆஷூரா தினத்தன்று நோன்பு நோற்பதைக் கண்டு அவர்களிடம் காரணம் வினவினார்கள். அதற்கு அவர்கள் நபி மூஸா(அலை) அவர்களும், அவர்களது கூட்டத்தாரும் பிர்அவ்னின் பிடியிலிருந்தும் நைல் நதியில் மூழ்காமலும் காப்பாற்றப்பட்டார்கள். எனவே அதனை கண்ணியப்படுத்து முகமாக இவ்விதம் நோன்பு நோற்கிறோம் என்றனர்.

அதற்கு நபியவர்கள் அப்படியாயின் இச்செயலை புரிவதற்கு நாங்களே மிகவும் தகுதி படைத்தவர்கள் எனக்கூறி அத்தினத்தில் நோன்பு வைப்பதை சுன்னத்தாக்கினார்கள். புஹாரி ஷரீஃப்-7,215

فيه اشارة الى استحباب صيام الايام التى تتجدد فيها نعم الله على عباده فان أعظم نعم الله على هذه الامة اظهار محمد صلى الله عليه وسلم وبعثته وارساله اليهم *

அல்ஹாஃபிழ் இப்னு ரஜப் ஹன்பலி அவர்கள் தமது லதாயிஃபுல் மஆரிஃப் என்ற நூலின் 98-ம் பக்கத்தில், இந்த நபிமொழியின் மூலம், அல்லாஹ் தனது அடியார்களுக்கு வழங்கியிருக்கும் எந்த ஒரு அருட்கொடைக்கும் நோன்பு நோற்று ஞாபகமூட்டுவது ஆகும் என்பது தெளிவாகிறது என குறிப்பிடுகிறார்கள்.

தொடர்ந்து, அவர்கள், வல்ல அல்லாஹ் இச்சமுதாயத்திற்கு வழங்கிய அருட்கொடைகளில் மிகவும் உன்னதமானது நம்மிடையே நபிகள் பூமான் அவர்களை அனுப்பிட்டதே என்றும், அதற்கு தோதுவாக சூரத்து ஆலி இம்ரானின் 164-ம் வசனமாக "நிச்சயமாக அல்லாஹ் முஃமின்களுக்கு அவர்களிடையே அவர்களில் ஒருவரை நபியாக அனுப்பி பேருபகாரம்" புரிந்ததாக கூறும் வசனத்தை ஆதாரமாகவும், நோன்பு வைப்பதின் நோக்கம் அல்லாஹ்வினதும் அவனது தூதரினதும் அன்பைப் பெறுவதே என்றும் கூறிய பின் இந்த அன்பை இஸ்லாமிய ஷரிஅத் அனுமதிக்கும் எந்த வழியிலும் அடையலாம் என்கின்றனர்.

நபிகளின் பிறந்த நாளை கொண்டாடி மகிழ்வதை பொறுக்க முடியாத சதிகாரர்களான பிரிவினைவாதிகள் இச்செயல் யூதர்களினதும், கிருத்தவர்களினதும் செயலுக்கு ஒப்பானது என்கின்றனர். காரணம் யாதெனில், அந்த யஹூதிகளும், நஸாராக்களும் (அதாவது வேதக்காரர்கள்) தத்தமது நபிமார்களின் பெயரை கொண்டாடுகின்றனர். அது போன்றுதான் இது என்கின்றனர்.

இங்கு நாம் சொல்வது யாதெனில் வேதக்காரர்கள், நபி மூஸா (அலை), நபி ஈஸா (அலை) இவ்விருவரையும் கொண்டாட அறவே தகுதி அற்றவர்கள். ஏனெனில் அவ்விரு நபிமார்களும் எதைக் கொண்டு வந்தார்களோ அதைப் புறக்கணித்ததோடு யூதர்கள், உஸைர் நபி (அலை) அவர்களை இறைவனது மகன் என்றும், கிருத்தவர்கள் நபி ஈஸா (அலை) அவர்களை இறைவனின் குமாரர் என்றும் கூறி இறைவனின் ஏகத்துவத்திற்கே இழுக்கைத் தேட முனைந்தவர்கள்.

ஆனால் நாமோ அவ்வாறன்று.................. நபிகள் கொண்டு வந்ததை ஏற்றுக் கொண்டதுடன் அந்நபிமார்களையும் இறைவனின்

தூதர்களாகவும் அவனது உரிய அடியார்களாகவும் அங்கீகரித்துக் கொண்டோம்.

விஷயம் இப்படி இருக்கையில் நம் செயலை அவர்களது செயலோடு ஒப்பிட்டு தரம் தாழ்ந்து போய்விட்டனர்.

அன்பர்களே, நாம் இன்று நபி அவர்களின் ஜனன தினத்தை நினைவு கூறும் முகமாக புரிந்துவரும் மீலாது விழா கொண்டாட இந்த நடைமுறை துருக்கியைச் சார்ந்த ஹழரத் முழஃப்பருத்தீன் என்ற நாதாவாலேயே தோற்றுவிக்கப்பட்டது. இதற்கு முன்பும் விழாக்கள் நடைபெற்றதாயினும் அவை அக்கால நடைமுறை பிரகாரமே நடைபெற்று வந்நது.

இப்னு தைமிய்யா இது விஷயமாக தனது "இக்திழாவுஸ் ஸிராதில் முஸ்தகீம்" என்ற நூலின் 619-ம் பக்கத்தில்

قال ابن تيمية فى كتابه ( اقتضاء الصراط المستقيم )

وكذالك ما يحدثه بعض الناس اما مضاهاة للنصارى فى ميلاد عيسى عليه السلام واما محبة للنبى صلى الله عليه وسلم وتعظيما له والله قد يثيبهم على هذه المحبة والاجتهاد لا على البدع من اتخاذ مولدالنبي صلى الله عليه وسلم عيدا *

நபி ஈஸா (அலை) அவர்களின் பிறந்த தினத்தை கொண்டாடும் நஸாராக்களுக்கு ஒப்பாகவோ அல்லது நபியுல்லாஹ் ﷺ அவர்கள் மேல் கொண்டுள்ள அன்பாலோ சிலரால் நபிகளின் பிறந்தநாள் விழா துவக்கப்பட்டு விட்டது. அன்பினால் இவ்விதம் உண்டுபண்ணியதற்கு அல்லாஹ்விடம் அவர்களுக்கு ஃதவாப் நற்கூலி உண்டு.

தொடர்ந்து அதே நூலின் 621-ம் பக்கத்தில்

فتعظيم المولد واتخاذه موسما قد يفعله بعض الناس ويكون له فيه أجر عظيم لحسن قصده وتعظيمه لرسول الله صلى الله عليه وسلم

நபிகள் ﷺ அவர்களின் ஜனன தினத்தை கண்ணியப்படுத்தும் எண்ணத்தில் கொண்டாடுதல் நன்மை தர வல்லது என்றும் குறிப்பிடுகிறார்.

இவ்விதமாக குறிப்பிட்ட இப்னு தைமிய்யா பின்னர் இச்செயலை பித்அத் - என்றும் கூறத் தவறவில்லை. இது தொடர்பாக தமிழில் "இஸ்லாத்தில் இடைச் செருகல் வேண்டாம்" என்று ஒரு புத்தகம் அபூபக்கர் அல்ஜஸாயிரியின் அரபி புத்தகத்தின் மொழியாக்கமாக வந்துள்ளது. எனினும் அதில் அவர் கூறாத செய்திகளை இவர் தமிழில் இடைச் செருகல் செய்துள்ளார் என்பது பெரும் வேடிக்கை தான். அதில் அவர் கூறும் விளக்கம் மேன்மை உலமாக்கள் கூறும் விளக்கத்திற்கு முற்றிலும் மாறுபட்டதே. இப்படியான தீய கொள்கையுடையோர் எழுதிய நூட்களையும் தமிழாக்கம் செய்து வருகின்றனர் எமது நாட்டினர் சிலர்.

அதில் அவர் கூடாத செயல்கள் எனக் கூறியுள்ள பல விஷயங்கள், ஸாலிஹான நல்லடியார்களைக் கொண்டு பண்டுநெடுங்காலமாக முஸ்லிம்கள் தொடராக செய்து வருபவையாகும். "பித்அத்கள் அனைத்தும் வழிகேடே"என்று திருநபி மொழிக்கு விளக்கம் தர தகுதியுள்ள இமாம்கள் தந்துள்ள கருத்தை முற்றிலுமாக புறக்கணித்து எழுதியுள்ளார்.

ஜஸாயிரி போன்ற தீய கருத்துக்களை பரப்பியவர்களை பெரும் மேதைகளாக கருதவும் அவர்கள் எழுதிய நூற்களை தமிழாக்கம் செய்யவுமுடியுமானால் அல்லாஹ்வினதும்அவனது தூதர் ﷺ அவர்களினதும் அன்பைப் பெற்ற உண்மை நல்லடியார்களான இமாம் ஷாஃபி, இமாம் சுயூதி, இமாம் ஸெய்னீ தஹ்லானீ, ஹழ்ரத் இஸ்ஸுத்தீன் இப்னு ஸலாம், ஹழ்ரத் அபீஷாமா, அல்முகத்திஸி, இமாம் நவவி, இமாம் ஸகாவி, ஹழ்ரத் ஷெய்க் அப்துல்லாஹ் அல் ஹிரரி, ஹழ்ரத் அப்துல்லாஹ் அலகமாரி (ரழியல்லாஹு அன்னா வஅன்ஹும்) போன்ற எண்ணற்ற பெரும் மேதைகள் "பித்அத்" என்ற சொல்லிற்கு வழங்கிய விளக்கத்தை இவர்களால் ஏன் ஏற்க முடியவில்லை?

பின்பற்றப்படுவதற்கு யாரும் தேவையில்லை. குர்ஆனும், ஹதீதும் போதும் என்று கருதுவோர் "ஜஸாயிர்" போன்றோர் கருத்தை ஆதாரமாக கொள்வது ஏன்? இல்லை, ஜஸாயிரியை நாங்கள் பின்பற்றவில்லை ஹதீதின் விளக்கமே இது தான் என்று அவர்கள் கூறின் அந்த ஹதீதில் இடம் பெற்றுள்ள "குல்லுன்" என்ற சொல்லிற்கு அரபி இலக்கணம் தரும் விளக்கம் என்னவென்று தெரியாமல் போனது ஏன்?

இவர்களது கருத்தின் பிரகாரம் மௌலித் நிகழ்வுகளும், நபி பெருமான் ﷺ அவர்களின் ஜனன தின விழாவும் தவறான செயல் என தீர்வு செய்ய முற்பட்டால் உலக முஸ்லிம்களில் பெரும்பாலானோர் வழிகேட்டில் இருப்பதாக அல்லவா கருதநேரிடும்.

ஹாஃபிழ் இப்னு நாஸிருத்தீன் திமஷ்கி அவர்கள் "மௌரிதுஸ் ஸாதி ஃபீ மௌலிதில் ஹாதி" என்ற கிரந்தத்தில்..........................................

قال الحافظ ابن ناصر الدين الدمشقى فى كتابه
الموردالصادى فى مولد الهادى

اذا كان كافرا جاء ذمه
وتبت يداه فى الجحيم مخلدا
اتى أنه فى يوم الاثنين دائما
يخفف عنه بالسرور بأحمدا
فما الظن بالعبد الذى كان عمره
بأحمد مسرورا ومات موحدا

குர்ஆனிலேயே சபிக்கப்பட்ட அபூலஹப், நபிகளின் ஜனன செய்தியை செவியுற்ற மாத்திரத்தில் தனது அடிமையான ஃதுவைபா (ரழி) அவர்களை உரிமையிட்ட காரணத்தினால் ஒவ்வொரு திங்கட் கிழமையும் அவனது வேதனை இலகுவாக்கப்படுகிறதென்றால் அண்ணல் கண்மணியை நபியாக ஏற்று அவர்களது பிறந்த நாளை கொண்டாடி ஈமானுடனேயே மரணிக்கும் ஒருவனுக்கு அல்லாஹ் வழங்கும் சங்கை எத்தகையதாக இருக்க வேண்டும்?

மௌலித் என்பது புகழ்மாலை. அதில் நபிமார்கள், வலிமார்களின் சிறப்பும், வாழ்வம்சங்களும் இடம் பெற்றுள்ளன. அவர்களது வாழ்வில் நடந்த சரித்திர சம்பவங்களும் அதில் தெரியப்படுத்தப்படுகிறது. பூனை கண்ணை மூடி விட்டால் உலகமே இருண்டதாக அது எண்ணிக் கொள்ளுமாம். அதுபோல் இதயம் மூடப்பட்ட இவர்கள் இதனை குற்றம் என கருதுகிறார்கள். நபிமார்களை புகழ்வது என்பது இன்று நேற்றோ அல்லது எமது மூதாதையர்களாலோ தோற்றுவிக்கப்பட்டது அல்ல.

நபிகளின் காலத்திலேயே ஹழ்ரத் ஹஸ்ஸான் இப்னு ஃதாபித், ஹழ்ரத் அபூ உபைதத்துல் ஜர்ராஹ் போன்ற தோழர்கள் நபிகளின் சந்நிதானத்திலேயே நபிகளை புகழ்ந்து பாடியது ஹதீது ஷரீஃபிலே பதியப்பட்ட ஒன்று இவர்கள் "மாதிஹுர் ரசூல்" ஷாயிரிர் ரஸூல் என்ற சிறப்புப் பெயரையும் பெற்றுள்ளார்கள் என்பதோடு ஹழ்ரத் ஹஸ்ஸான் இப்னுஃதாபித் (ரழி) அவர்களுக்கு அண்ணல் நபி அவர்களே பள்ளியில் மேடை அமைத்து தன்னை புகழ்ந்து பாடுமாறு சொன்னதெல்லாம் தான் இந்த மௌலிதிற்கு அடிப்படை என்பதை அன்பர்கள் உணர்ந்து கொள்ள வேண்டும்.

மக்காவிலிருந்து மதீனா நகருக்கு நபிகள் பூமான் ﷺ அவர்கள் ஹிஜ்ரத் சென்றபோது அவர்களைப் புகழ்ந்து கவிபாடி மதீனாவாசிகள் வரவேற்றது, திருமண வீட்டில் பெண்கள் "தஃப்" அடித்து நபிகளை புகழ்ந்து பாடியது, எதிரிகள் நபிகளை வசையாக கவிபாடியபோது அதனை மறுத்து தோழர்களை நபிகள் மறுப்புக் கவி பாடச் சொன்னது இவைகளும் தான் இந்த மௌலிதிற்கு ஆதாரம்.

இப்படி பாடிய கவிகளை அடிப்படையாகவும் ஆதாரமாகவும் கொண்டு எமது மூதாதையர்கள் தமது நாவினாலும், பேனாவினாலும் அம் மாநபி ﷺ அவர்களைப் புகழ்ந்து பாடினர் எழுதினர். அதனை நூல் வடிவமாக தந்தனர்.

"அல்மகாலத்துஸ்ஸுன்னியா"வில் 187-ம் பக்கத்தில் அஷ்ஷெய்க் அப்துல்லாஹ் அல் ஹிரரி, ஜஸாயிரி கூறியதாக ஒரு செய்தியை பதிந்துள்ளார்.அது மௌலிது நிகழ்ச்சியில் அறுக்கப்படும் பிராணி பன்றியை விட ஹராமானது என்பதே, இதுதான் அபூபக்கர் அல்ஜஸாயிரி நபிமேல் கொண்ட அன்பு. இவரா நபியை தன் உயிரை விட அதிகமாக நேசிப்பவர்? இவரது சொற்களா பின்பற்றப்பட தகுந்தவை?

எமது மூதாதையர்கள் விட்டுச் சென்றதை பின்பற்றக் கூடாது என்றும், அவர்கள் வழிகேட்டில் இருந்திருக்கலாம் என்றும் குறிப்பிடும் இவர்கள் யாரின் கூற்றுகளை பின்பற்றுகிறார்களோ அவர்கள் தங்களின் கொள்கை மூதாதையர்களைத் தானே பின்பற்றுகிறார்கள். அப்படியானால் அவர்கள் ஏன் வழிகேட்டில் இருந்திருக்க முடியாது? அத்தகைய கொள்கை குழப்பவாதிகளே தங்களது மனோ இச்சைப் பிரகாரம் குர்ஆனுக்கும் ஹதீதுக்கும் விளக்கம் செய்தவர்கள் என்ற வரலாறு தெளிவாகத் தானே உள்ளது. "அரண்டவனுக்கு இருண்டது எல்லாம் பேய்" என்ற மொழிக்கொப்ப இதயம் கெட்டுப்போன இவர்கள், நாம் செய்பவற்றை எல்லாம் குற்றமாகக் கருதுகிறார்கள்.நபிகளின் பிறந்த தினத்திற்கு - ஈத் அதாவது பெருநாள் என பெயரிட முடியுமா? ஈத் பெருநாள் என்பது நோன்புப் பெருநாளும் ஹஜ்ஜுப் பெருநாளும் தானே என சிலர் சந்தேகிக்கின்றனர்.

அல்குர்ஆன், அல்,ஹதீதின் வெளிச்சத்தில் இவ்விரண்டல்லாதவற்றிற்கும் ஈத் என்ற வார்த்தை உபயோகிக்கப்பட்டிருப்பதைக் காண முடியும். ஷரீ அத்தீன் பார்வையில் மகிழ்ச்சி தரத் தக்க எந்த ஒரு நிகழ்வையும் ஈத் என குறிப்பிட முடியும். அவ்வகையில் முஃமின்களுக்கு பெருமகிழ்ச்சி தரத் தக்கதாக திகழும் நபிகளின் ஜனன தினத்தை ஏன் ஈத் என்று சொல்லக்கூடாது?

ஜும்ஆ தினம் - ஈத் - தினமாகும். எனவே தான் அந்த நாளையில் நோன்பு நோற்பதை நபிகள் பெரிதும் விரும்பவில்லை. அந்த நாளைக்கு முன்பு தொடராகவோ அல்லது அந்த நாளிலிருந்து தொடர்ந்து நோன்பு நோற்பதாக இருந்தால் அதற்கு அனுமதி அளித்துள்ளார்கள் நபிகள் என ஹழ்ரத் அபூஹுரைரா (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

அல்முஸ்தத்ரக் - 1-603

நாட்களுக்கு தலைமையானது வெள்ளிக் கிழமை அந்நாள் அல்லாஹ்விடம் கண்ணியமான நாள். அது ஈதுல் ஃபித்ர், ஈதுல் அழ்ஹா இவ்விரண்டை விடவும் அல்லாஹ்விடம் சிறந்தது.

மிஷ்காத்துல் மஸாபீஹ் - பாபுல் ஜும்மா

வெள்ளிக் கிழமைக்கான இச்சிறப்பு ஏன் ஏற்பட்டது என ஹதீதின் அடிப்படையில் சிந்திக்க தலைப்பட்டால், அந்நாளில் தான் ஹழ்ரத் ஆதம் (அலை) அவர்கள் படைக்கப்பட்ட தாகவும்,வஃபாத்தானதாகவும், அபூதாவூத், நஸஈ, இப்னு மாஜா, தாரமீ போன்ற ஹதீது கிரந்தங்கள் குறிப்பிடுகிறது.நபி ஆதம் (அலை) அவர்கள் படைக்கப்பட்ட நாள் நாட்களின் தலைமையை வகிக்கிறது எனில் ஈருலகத் தலைவர் எம்மான் நபிகள் கோமான் ﷺ அவர்கள் பிறந்த நாள் ...................................,? சிந்தியுங்கள்.............

வெள்ளி, அரஃபா தினம், துல்ஹஜ் 10-ம் நாள் , அய்யாமுத்தஷ்ரிக் ஆகியவை நமது ஈத் பெருநாளாகும் என நபிகள் கூறியதாக ஹழரத் உக்பா இப்னு ஆமிர் (ரழி) அவர்கள் ரிவாயத் செய்திருக்கிறார்கள்.

அல்முஸ்தத்ரக்- 1-600

இமாம் அஹ்மதுபுனு ஹம்பல்(ரழி) அவர்கள் லைலதுல் கதிரை விட ஜுமுஆவின் இரவு சிறந்தது எனக் கூறியுள்ளார்கள். இக்கூற்றிற்கு ஷெய்கு ஃபத்ஹுல்லா பன்னானி அவர்கள்...............................

ஜுமுஆவின் இரவு லைலதுல் கதிரை விட கண்ணியம் வாய்ந்ததுதான். காரணம் யாதெனில் அந்நாளில் தான் கோமான் ﷺ அவர்களின் ஒளி அன்னை ஆமினா (ரழி) அவர்களின் கருவறைக்குச் சென்றதாக "மௌலிது கைரில் கல்கி" யில் 158-ம் பக்கத்தில் குறிப்பிடுகிறார்கள்.

இதே கருத்தை அஷ்ஷெய்க் அப்துல்ஹக் முஹத்திஸ் தெஹ்லவி அவர்கள் உறுதிப்படுத்தும்போது

இமாம் அஹ்மது இப்னு ஹன்பல் (ரழி) அவர்கள் லைலத்துல் கதிரை விட ஜும்ஆவை சிறந்தது என கூறியதற்கு காரணம் நபிகள் ﷺ அவர்களின் ஒளி ஹழ்ரத் ஆமினா (ரழி )அவர்களின் கருவறைக்குள் சென்றதால் தான் எனக் கூறியதோடு, இந்நபி அவர்கள் கணக்கிடமுடியா சிறப்புக்களை கொண்டவர்கள் எனவும் அறிவிக்கிறார்கள். அஷிய்யதுல் லம்ஆத் - 1-577

இக்கருத்தை மௌலானா அஷ்ரப் அலி தானவி கூட தமது ஜும்ஆகே ஃபழாயில் வஅஹ்காம் என்பதின் 4-ம் பக்கத்தில் குறிப்பிட்டதோடு நபி அவர்களின் வருகையினால் இவ்வையகம் எண்ணிலடங்கா அருட்கொடைகளை பெற்றுக் கொண்டது என இயம்புகிறார்.

"தன்வீருல் குலூப் ஃபீ முஆமலதி அல்லாமில் குயூப்"என்ற நூலின் 68-ம் பக்கத்தில் அகிலத்தின் அருட்கொடை அண்ணலெம் கண்மணி ﷺ அவர்களின் ஜனன நேரத்தின் மட்டிடமுடியா மகிமையை அஷ்ஷெய்கு முஹம்மது அமீன் அல்குர்தி அல்அர்பிலி அஷ்ஷாஃபிஈ. (ரஹ்) அவர்கள் குறிப்பிடும் போது

ومما ينبغي ان يعرف أنه صلى الله عليه وسلم ولد بمكة فى المكان المعروف بسوق الليل قبيل فجر يوم الاثنين ثانى عشر ربيع الاول هذه الليله أفضل من ليلة القدر ويستجاب الدعاء فى الساعة التى ولد فيها فى كل

அருளே உருவான அருட்சுடர் அண்ணலெம் பூமான் கண்மணி ﷺ அவர்கள் மக்காவில்"சூகுல்லைல்"எனும் பிரபல்யமான இடத்தில் புனித ரபீவுல் அவ்வல் பிறை 12 அதிகாலை சுபுஹு நேரத்திற்கு சற்று முன்பாக உதயமானார்கள்.

அவ்விரவு ரமழான் மாத லைலத்துல் கதிரை விடவும் மகத்துவம் கொண்டது. தினமும் பூமான் நபிகள் ﷺ அவர்கள் உதயமான நேரத்தில் கேட்கப்படும் பிரார்த்தனைகள் அங்கீகரிக்கப்படுகின்றன என்ற தகவலை யாவரும் கட்டாயம் அறிந்திருக்க வேண்டுமென குறிப்பிடுகிறார்கள்.

மாலிக் மத்ஹபின் பெரியவர்களில் ஒருவரான அஷ்ஷெய்க் அபுத்தீப் முஹம்மது இப்னு இப்ராஹீம் அவர்கள் ஒரு மத்ரஸாவின் அருகாமையில் செல்லும்போது அம்மத்ரஸாவின் பொறுப்பதிகாரியை அழைத்து இன்றைய நாள் மகிழ்ச்சிகரமான நாள். எனவே மாணவர்களுக்கு விடுமுறை அளியுங்கள் எனக்கூறியதாக இமாம் ஜலாலுத்தீன் சுயூதி(ரஹ்) அவர்கள் அல்ஹாவிலில் ஃபதாவா (1-197-ல்) பதிந்துள்ளார்கள்.

ரபீவுல் அவ்வல் மாதத்தில் மீலாது விழாக்கள் அமைத்து உணவளித்து அம்மாத இரவுகளை பெருநாளாகக் கொண்டாடும் யாவருக்கும் அல்லாஹ் அருள் புரிவானாக! என்றும் இதனை வெறுக்கும் நோயாளிக்கு நீங்காத கடும் நோய் காணும் என்றும் புனித புகாரிஷ் ஷரீஃபின் விரிவுரையாளர் இமாம் கஸ்தலானி (ரஹ்) அவர்கள் குறிப்பிடுகிறார்கள். மவாஹிபுல்லதுன்னியா-1-48

நபியுல்லாஹ் ﷺ அவர்களின் ஜனன தினத்தை கொண்டாடவும் அதனை ஈத் பெருநாள் என கூறவும் இதுவரை நாம் கூறிய விளக்கங்களும் ஆதாரங்களும் போதும் என கருதுகிறோம்.

நபிகளின் ஜனன தின விழாவிற்கு ஈத் என பெயரிட்டது இதனை விட சிறப்பானதோர் பெயர் கிடைக்கவில்லை என்பதால் தான் என்றும் இந்நாள் (உலகின்) சகல நாட்களை விடவும் சிறந்தது என்றும் அஷ்ஷெய்க் முஹம்மது அலவி அல்மாலிகி (ரஹ்) அவர்களின் கூற்று இங்கு குறிப்பிடத் தக்கது. அல்மௌலிதுர்ராவி - 32

## சத்திய கொள்கையுடையோருக்கு.......................

சத்திய கொள்கையுடைய சுன்னத்-வல்-ஜமாஅத் சகோதரர்களே! உங்களிடம் பணிவாக யாம் வேண்டிக் கொள்வதெல்லாம், ஷரீஅத்தின் நடைமுறையிலேயே எந்த காரியத்தையும் செய்யுங்கள். விழாக்காலங்களில் மட்டும் தொப்பியும், சால்வையும் அணிந்து கொள்வதால் மட்டும் நமது கடமைகள் நிறைவாகி விடுவதில்லை. அவ்வாறு நடந்து கொள்வதால் பிறர் நம்மை ஏளனமாக நோக்க வாய்ப்பளிக்கிறோம். ஷரீஅத்திற்கு உட்படாத எந்த தரீகதும் இல்லை. ஹகீகத்தும்இல்லை.

தொழாமல், நோன்பு நோற்காமல் ஷரீஅத் கட்டளையிடும் ஏனைய காரியங்களை புரியாமல் நல்லடியார்கள் மீது கொண்ட அன்பினால் மௌலிது நிகழ்வையும், கந்தூரியையும் கொண்டாடுவது தங்களைத் தாங்களே ஏமாற்றிக் கொள்வதாகும். எனவே பிறர் நம்மை குற்றம் பிடிக்காத வகையில் நாம் நடந்து கொள்வது அவசியமாகும்.

யாஅல்லாஹ், எங்கள் யாவரையும் உன் நபிவழியில் சென்று ஜெயம் பெற்ற கூட்டத்தில் சேர்த்து வைப்பாயாக. உனது நபியின் பொருட்டால் இவ்வடியானுக்கு தொடர்ந்து உனது புகழையும், உனது ஹபீபின் சிறப்பையும் எடுத்துக் கூற வாய்ப்பு வழங்கியவனே!எனது இறைவனே, உனக்கே எல்லா புகழும். இவ்வடியானின் இந்த சேவையை பரிபூரணமாக ஏற்றுக் கொள்வாயாக, மேலும் இவ்வடியான் உனது நேசர்களின் சகவாசத்தில் ஈருலகிலும் இருந்திட உனது நபியின் பொருட்டால் தௌஃபீக் செய்வாயாக, ஆமீன்.

# மாமதீனா செல்வோரே....

மாமதீனா நோக்கி மாண்பு நபியை தரிசிக்கச் செல்வோரே !

அப்புண்ணியம் பூத்துக்குலுங்கும் நகரின் எல்லையில் நீர் நுழைந்த வேளையில் அங்கு தென்படும் மரங்கள், கட்டிடங்கள் போன்றவற்றைக் காணும் போதெல்லாம் அந்த கஸ்தூரி மணங் கமழும் மன்னர் நபி மீது ஸலவாத்தை அதிகமாக்கிக் கொள்ளும். அந்த ஸலவாத்தின் பொருட்டால் உமது தேவைகளும் எண்ணங்களும் நிறைவேறிட பிரார்த்தித்துக் கொள்ளும். இதில் தவறேதுமில்லை.

கூறியது - ஆரிஃபு பில்லாஹ் ஷெய்யித் அஹ்மத் இப்னு ஹஜருல் ஹைதமீ (ரஹ்)

நூல் - அல்ஜௌஹருல் முனழ்ழம்